# மீனாக்ஷி தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்








பிரசுரகர்த்தா:
...நா. சுவாமிநாதன்
...ரை :: திருநெல்வேலி

# மீனாக்ஷி தமிழ் வாசகம்
## இரண்டாம் புத்தகம்

(திருத்திய பதிப்பு)

புதுக்கோட்டை மகாராஜா கல்லூரித் தமிழ்ப் பண்டிதர்
**வித்துவான் நா. கனகராஜ ஐயர்** B. O. L., **அவர்கள்**
இயற்றியது



பிரசுரகர்த்தர் :
**வி. சூ. சுவாமிநாதன்**
**மதுரை :: திருநெல்வேலி**


[விலை ரூ. 0—5—0

# தேச வணக்கம்

---

(கும்மி மெட்டு)

ஓங்கும் இமாசலம் ஒளிமுடியாம்; எங்கும்
உலவு பலநதி மாலைகளாம்;
தாங்கும் இக்கோலம் தழைக்கும் இந்தியத்
தாயே! உனக்கு நமஸ்காரம். 1

கண்டங்க ளெங்கும் காணும்நற் காட்சிகள்
கலந்து தன்னுள்ளே காட்டுதலால்
அண்டமெங்கும் இல்லா அருமை இந்திய
அன்னை! உனக்கு நமஸ்காரம். 2

நீர்வளமும் காட்டின் நீள்வளமும் மலை
நேர்வளமும் நகர்சாரும் சிற்பச்
சீர்வளமும் மிகத்திகழும் இந்தியச்
செல்வி! உனக்கு நமஸ்காரம். 3

ஞாலமெங்கும் வெகு காலமாக நல்ல
நாகரிகக் குறியாக உயர்
சீலமும் ஞானமும் சிறக்கும் பாரத
தேவி! உனக்கு நமஸ்காரம். 4

வே. முத்துசாமி ஐயர்

# பொருளடக்கம்

# மீனாக்ஷி தமிழ் வாசகம்

## இரண்டாம் புத்தகம்

# 1. படப் பழக்கம்—I




மேலே இருக்கும் படத்தில் நீங்கள் காண்பவைகளை ஒவ்வொன்றாய்ச் சொல்லுங்கள்.

---

குறிப்பு:—முதலில் ஒவ்வொரு பையனையும் படத்திலுள்ளவைகளில் ஒன்றை மட்டும் கூறச் சொல்லவும். பிறகு உயிருள்ளவைகளையும், அசையாப் பொருள்களையும், தனித்தனியாயும், கடைசியாய் எல்லாவற்றையும் கூறச் சொல்லவும்.

---



## 2. பசு

இது ஒரு பசு.
இதற்குக் கால்கள் நான்கு.
கொம்புகள் இரண்டு உண்டு.
வாலின் நுனியில் மயிர் இருக்கும்.
பசு புல்லைத் தின்னும்.
இது அசை போடும் பிராணி.
பசு பால் கொடுக்கும்.
பால் மிகவும் ருசி உள்ளது.
பசு வீட்டில் வளரும் பிராணி.



## 3. ரோஜா

இது ஒரு ரோஜா.
ரோஜா மிகவும் அழகுள்ளது.
நல்ல மணமுள்ளது.
ரோஜா வாடினாலும் மணம் போகாது.
ரோஜாவில் இரண்டு வகை உண்டு.
அவை: வெள்ளை, சிவப்பு.
ரோஜா இதழ்கள் மெதுவாய் இருக்கும்.
ரோஜா மாலை அழகாய் இருக்கும்.
ரோஜாச் செடியில் முள் உண்டு.
பூவிலிருந்து பன்னீர், அத்தர் செய்யலாம்.
பன்னீர் மிகவும் குளிர்ச்சியானது.
ரோஜா அத்தர் அதிக வாசனையுள்ளது.



## 4. அவயவங்களின் வேலை

தலையால் கடவுளை வணங்கலாம்.

கண் பொருள்களைப் பார்க்கும்.

காது பலவித ஓசையைக் கேட்கும்.

மூக்கு வாசனை அறியும்.

நாக்கு பண்டங்களை ருசி பார்க்கும்.

பல் பதார்த்தங்களை மெல்லும்.

கை, எழுதும்; கும்பிடும்.

விரல்கள், எதையும் எடுக்கும்; எண்ணும்.

கால், நிற்கும்; நடக்கும்.

**வாயால் நல்ல வார்த்தை பேசு.**



# 5. மயில்

மயில் மிகவும் அழகான பக்ஷி.
அதற்கு நீண்ட சிறகு உண்டு.
அதைத் தோகை என்கிறோம்.
ஆண் மயிலின் தோகை நீளமானது.
அதற்குத் தலையில் கொண்டை உண்டு.
மயில் தோகையில் பல நிறங்கள் உண்டு.
அவை: பச்சை, நீலம், மஞ்சள், கறுப்பு.
மழைகாலத்தில் தோகையை விரித்து ஆடும்.
அப்போது அது அழகாய் இருக்கும்.
மலை நாடுகளில் மயில் அதிகம் உண்டு.
மயில் தோகை விசிறி கட்ட உதவும்.
மயில் தோகையைக் காவடியில் கட்டுவார்கள்.



# 6. பசு—காளை

ராமா ! இதோ பார் பசு மாடு.
அதோ நிற்பது காளை மாடு.
பசுவுச்கும் காளைக்கும் கால்கள் நான்கு.
வாலின் நுனியில் மயிர் அடர்ந்து இருக்கும்.
பசு நமக்குப் பால் கொடுக்கும்.
பசுவின் பால் குழந்தைகளுக்கு நல்லது.
பாலில் மோர் சேர்ந்தால் தயிர் ஆகும்.
தயிரைக் கடைந்தால் வெண்ணெயும் மோரும் கிடைக்கும்.
வெண்ணெயை உருக்கினல் நெய் ஆகும்.
காளை மாடு ஏர் உழும் ; வண்டி இழுக்கும்.
மாட்டுச் சாணம் வீடு மெழுக உதவும்.

**பசுவையும் காளையையும் பக்ஷமாய் நடத்து.**



## 7. தொழிற் பெயர்கள்

குலாலர் மண் பாண்டம் செய்கிருர்.

தச்சர் மரத்தை அறுக்கிருர்.

தட்டார் நகைகள் செய்கிருர்.

கன்ஞர் பித்தளை வேலை செய்கிருர்.

கொல்லர் இரும்பைக் காய்ச்சி அடிக்கிருர்.

சேணியர் துணி நெய்கிருர்.

கொத்தர் வீடு கட்டுகிருர்.

வேளாளர் வயல் உழுகிருர்.

வியாபாரி பண்டம் விற்கிருர்.

செம்படவர் மீன் பிடிக்கிருர்.

உபாத்தியாயர் பாடம் கற்பிக்கிருர்.

மாணுக்கன் பாடம் படிக்கிருன்.



## 8. தாயார்

படத்தில் இருப்பவர் என் தாயார்.
இவர் என்னிடம் அதிக அன்பு உள்ளவர்.
நான் குழந்தையாய் இருந்தபோது பால் கொடுத்து வளர்த்தவர்.
நான் தூங்கும்போது இனிமையாய்த் தாலாட்டுப் பாடியவர்.
நான் கேட்ட பொருளை எனக்குத் தந்தவர்.
நான் நோயில்லாமல் வளர, தான் மருந்து உண்டவர்.
நான் நல்ல பிள்ளையாய் வளரும்படி பழக்கம் செய்தவர்.
தாயின் சொற்களே எனக்கு வேதம்.
முனிவரும் தம் தாயாரை வணங்குவர்.

**தாயே மேலான தெய்வம்.**



## 9. தகப்பனார்

இவர் என் தகப்பனார்.
இவர் எனக்கு உணவு, உடை கொடுப்பவர்.
இவர் எனக்கு விளையாட்டுப் பொருள்களும், புத்தகங்களும் தருபவர்.
எனக்கு அடிக்கடி நல்ல புத்தி சொல்பவர் இவரே.
நான் நல்ல பிள்ளை ஆக வழி சொல்பவரும் இவரே.
நான் நன்றாய்ப் படித்து மேன்மை அடைய நினைப்பவரும் இவரே.
நான் பேசுவதில் குற்றமுள்ள சொற்களைத் திருத்தி, என்னை நன்றாய்ப் பேசும்படி செய்பவரும் இவரே.
தாய் தந்தையரே கண்கண்ட தெய்வங்கள்.

**தகப்பனார் சொன்னபடி நட.**





## 10. சூரியன்—சந்திரன்

காலையில் சூரியன் உதிக்கும்.

நடுப்பகலில் சூரியன் உச்சிக்கு வரும்.

மாலையில் சூரியன் மறையும்.

பிறகு சந்திரன் உதிக்கும்.

சூரியன் உஷ்ணமான ஒளி தரும்.

சந்திரன் குளிர்ச்சியான ஒளி தரும்.

சூரியன் என்றும் ஒரே அளவாய் இருக்கும்.

சந்திரன் என்றும் ஒரே மாதிரி இராது.

சூரியன் ஒளியால் சுத்தம் ஏற்படும்.

சூரியன் கிழக்கே உதித்து,மேற்கே மறையும்.

ஒரு பகலும் இரவும் சேர்ந்தது ஒரு நாள்.

ஏழு நாள் சேர்ந்தது ஒரு வாரம்.

## 11. ஆம்—அல்ல

உண்டு—இல்லை.

வேண்டும்—வேண்டாம்.

பறக்கும்—பறக்காது.

சூரி, இது உன் புத்தகமா?
ஆம் ஐயா, அது என் புத்தகம்.
இது உன் கற்பலகையா?
ஐயா, அது என்னுடையது அல்ல.
கமலா, உனக்குத் தம்பி உண்டா?
எனக்கு ஒரு தம்பி உண்டு, அம்மா.
உனக்குத் தங்கை உண்டா?
அம்மா, எனக்குத் தங்கை இல்லை.
சீனு, உனக்கு என்ன வேண்டும்?
எனக்குப் புத்தகம் வேண்டும், ஐயா.
உனக்குப் பேனா வேண்டுமா?
எனக்குப் பேனா வேண்டாம், ஐயா.
பருந்து அதிக உயரம் பறக்கும்.
கோழி அதிக உயரம் பறக்காது.



## 12. இன்று—நேற்று—நாளை

### போகிறேன்—போனேன்—போவேன்.

நீ தினம் பள்ளிக்கூடம் போகிறாயா?
ஆம், நான் தினம் பள்ளிக்கூடம்
[போகிறேன்.

இன்று என்ன கிழமை?
இன்று ஞாயிற்றுக் கிழமை.
இன்று பள்ளிக்கூடம் உண்டா?
இன்று பள்ளிக்கூடம் இல்லை.
நேற்று என்ன கிழமை?
நேற்று சனிக் கிழமை.
நேற்றுப் பள்ளிக்கூடம் போனாயா?
நேற்றுப் பள்ளிக்கூடம் போனேன்.
நாளை என்ன கிழமை?
நாளை திங்கட் கிழமை.
நாளை பள்ளிக்கூடம் போவாயா?
நாளை பள்ளிக்கூடம் போவேன்.





## 13. தென்னை மரம்

இதோ பார்! தென்னை மரம். இதற்குக் கிளைகள் இல்லை. ஆனால் மட்டைகள் உண்டு. தென்னை மரத்திற்குப் பாளைகள் உண்டு. பாளையில் தேங்காய் காய்க்கும்.

இளந்தேங்காய் இளநீர் எனப்படும். முற்றின காய் நெற்று எனப்படும். வெயில் காலத்தில் இளநீர் குடிக்கலாம். தேங்காய் மிகவும் ருசியுள்ளது. தென்னை இலைக்கு ஓலை என்று பெயர். ஓலைகளால் கீற்றுகள் பின்னலாம். தென்னை மட்டையை அடுப்பு எரிக்கலாம். தேங்காய் மட்டையால் கயிறு பின்னலாம். தென்னை மரம் செங்குத்தாய் அதிக உயரம் வளரும். இதன் ஒவ்வொரு பாகமும் உபயோகமுள்ளது.



## 14. தவளை

இது தவளையின் படம். தவளை குளங்களி லும் கிணறுகளிலும் வசிக்கும். இதற்குக் கண்கள் பெரியவை. சிறு பூச்சிகளையும் பார்த்துவிடும்.

தவளை தண்ணீரில் நீந்தும். தரையில் தத்திச் செல்லும். தவளை முட்டையிடும். அதிலிருந்து குஞ்சு வெளிப்படும். தவளையின் முன் கால்களில் நான்கு விரல்கள் உண்டு. பின் கால்களில் ஐந்து விரல்கள் இருக்கும். பின் கால் விரல்கள் மெல் லிய தோலால் சேர்க்கப்பட்டிருக்கும். அதனால் தான் அது தண்ணீரில் நீந்துகிறது. அதன் முன்கால்களை விடப் பின் கால்கள் அதிக நீளம். ஆகையால் அது தத்துகிறது.

தவளையின் நாக்கில் ஒருவிதமான பசை உண்டு. ஆகையால் அது எந்தப் பூச்சியையும் தன் நாக்கினால் பிடித்து விழுங்கிவிடும். தவளை

நீரில் உள்ள பூச்சிகளைத் தின்னும். தோட்டங்களிலுள்ள பூச்சிகள் பயிர்களுக்குக் கெடுதல் செய்கின்றன. அவற்றையும் தவளை தின்று விடுவதினல் நமக்கு நன்மையே செய்கிறது.

---



## 15. யானை

நிலத்தில் வசிக்கும் மிருகங்களில் யானை மிகவும் பெரியது. இதன் முகத்தில் நீளமாய்த் தொங்குவது தும்பிக்கை. இந்தத் தும்பிக்கையினல் அது மூச்சுவிடும்; தண்ணீரை உறிஞ்சிக்

குடிக்கும்; கனத்த சாமான்களைத் தூக்கும். தும்பிக்கையினால் சிறு நாணயத்தைக்கூட அது எடுத்துவிடும். யானையின் மண்டை பெரியது. ஆனால் கழுத்துக் குறுகி இருக்கும். அதன் உடல் மிகவும் பருத்து இருக்கும். இந்தப் பருத்த உடலைத் தாங்குவதற்குத் தடித்த தூண்கள் போல் நான்கு கால்கள் உண்டு. யானையின் காது முறம் போல் இருக்கும். அதன் கண்கள் மிகவும் சிறியவை.

யானை மந்தமான பிராணி. அசைந்து அசைந்து நடக்கும். அது இலை, தழை, கரும்பு இவற்றைப் பிரியத்துடன் தின்னும்.

அதற்கு ஞாபகசக்தி அதிகம். ஆண் யானையின் வாயின் இரண்டு பக்கங்களிலும் வெண்மையாய் நீண்டு இருப்பது தந்தம். அது மிகவும் விலையுள்ளது. யானை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்.

---

## 16. பூந்தோட்டம்

பிள்ளைகளே! நீங்கள் பூந்தோட்டத்தைப் பார்த்திருக்கிறீர்களா? அதில் பலவிதப் பூஞ்செடிகள் இருக்கும். பலவிதமான பூங்கொடிகளும், மரங்களும் அதில் உண்டு.

**மல்லிகைச் செடி** :—மல்லிகைப்பூ, வெண்மை நிறமாய் இருக்கும். அது மிகவும் வாசனையை உடையது. மல்லிகைப் பூவை மாலையாகத் தொடுக்கலாம். மாலையைக் கழுத்தில் போட்டுக் கொள்வார்கள். இரண்டு இரண்டாய்த் தொடுத்துத் தலையில் அணிந்து கொள்வதும் உண்டு.



**ரோஜாச் செடி** :—ரோஜாப்பூ, சிவப்பு, வெண்மை முதலிய பல நிறமுள்ளது. இது வாசனையிலும், அழகிலும் சிறந்தது. ரோஜா மாலை வெகு அழகாய் இருக்கும். ரோஜாமாலையைக் கடவுளுக்கும், பெரியோர்களுக்கும் போடுவார்கள். ரோஜாப்பூவைப்பற்றி நீங்கள் படித்த விஷயங்களைச் சொல்லுங்கள்.



**முல்லைக் கொடி** :—முல்லைப்பூ, மல்லிகைப் பூவைப் போலவே சிறியதாயும் வெண்மையாயும் இருக்கும். இதுவும் வாசனை உள்ளது. முல்லைப் பூவையும் மல்லிகையைப் போலவே அணிந்து கொள்ளலாம்.

சம்பங்கிக் கொடி :—இதன் பூ சற்று மஞ்சள் நிறமாய்ச் சிறியதாய் இருக்கும். இதுவும் நல்ல வாசனை உள்ளது. இதை நூலில் கோத்து அணிவார்கள். சம்பங்கிப் பூவிலிருந்து வாசனைத் தைலம் செய்வார்கள். சம்பங்கித் தைலம் கண்ணுக்குக் குளிர்ச்சி தரும்.



மகிழ மரம் :—இதன் பூ மிகச் சிறியதாய், மங்கலான வெண்மை நிறம் உள்ளதாய் இருக்கும். மகிழம்பூ மிகுந்த வாசனை உள்ளது. இதை மாலையாகத் தொடுத்து அணிவார்கள். பூ வாடிப் போனாலும் வாசனை போகாது. ஆகையால் மகிழம் பூவைத் தொடுத்துப் பல தினங்கள் அணிந்துகொள்ளலாம்.

பவள மல்லிகை மரம் :—இதனைப் பாரிஜாதம் என்றும் சொல்லுவார்கள். இந்தப் பூவின் காம்பு பவளம் போன்ற சிவப்பு நிறமானது. இதழ்கள் மல்லிகைப் பூவைப் போல் வெண்மையாய் இருக்கும். இதுவும் வாசனை உள்ளது. இதனை நூலில் கோத்துக் கடவுளுக்கு அணிவார்கள்.



# 17. உழைப்பு

ஈ :—சிறுவனே ! நீ எங்கே போகிறாய் ?

சிறுவன் :—நான் பள்ளிக்கூடம் போகிறேன்.

ஈ :—குளிர்ந்த காற்றும், அழகான இளம் வெயிலும் இருக்கும் இந்தச் சமயத்தில் என்னைப் போல் சந்தோஷமாய் விளையாடு. ஏன் வீணாகக் கஷ்டப்படுகிறாய் ?



சிறுவன் :—புத்திகெட்ட ஈயே! நான் என்ன கஷ்டப்படுகிறேன்? விளையாடும்போது விளையாட வேண்டும். வேலை செய்யும்போது வேலை செய்ய வேண்டும். நாள் முழுவதும் விளையாடினால் நம் வேலையை யார் செய்வார் ?

ஈ :—உனக்கு என்ன வேலை? நீ படிக்கும் பையன்; உனக்கு அதிகக் கஷ்டமில்லை. நான் சந்தோஷமாய் உலாவி வரும்போதே ஆகாரமும் சம்பாதித்துக் கொள்கிறேன். உன்னால் இது முடியாதோ?

சிறுவன் :—நான் உன்னைப்போல் இருக்க மாட்டேன். நான் போகிறேன்.

ஈ :—போ ! போ ! நீ எறும்பு முட்டாளுக்குத் தகுந்த சிநேகிதன். உன்னோடு நான் பேசக் கூடாது. அதோ எறும்பும் வருகிறது. நான் போகிறேன் என்று சொல்லிப் பறந்து போய் விட்டது.

எறும்பு :—அப்பா ! குழந்தாய் ! இங்கே ஈ ஒன்று என்னவோ பேசிக்கொண்டிருந்ததே. அது எங்கே?

சிறுவன் :—எறும்பாரே! நீர் அதற்கு விரோதியாம். உம்மைக் கண்டதும் அது ஓடிவிட்டது.

எறும்பு :—பாவம் ! அது என்ன செய்யும். மழைக் காலம் வருமே ! வந்தால் உணவுக்குக் கஷ்டப்படவேண்டி வருமே என்று நான் வேலை செய்கிறேன். ஆகாரம் சேர்க்கவேண்டிய நாட்களாகிய வெயில்காலத்தில் சுறுசுறுப்பாய் உழைக்கிறேன். அதனால் வேலைசெய்ய முடியாத மழைக் காலத்தில் போதுமான ஆகாரத்துடன் என்

புற்றில் சௌக்கியமாய் இருக்கிறேன். ஆனால் ஈயோ வேலையே செய்யாமல் திரிகிறது. அதனால் மழைக் காலத்துக்குள் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோகிறது. உனக்கு எது நல்லதாகத் தோன்றுகிறதோ அதன்படி நட.

சிறுவன்:— எறும்பாரே! நீர் செய்வதே நல்லதாகத் தோன்றுகிறது. நான் உம்மைப் போலவே சுறுசுறுப்பாய் உழைப்பேன். இதோ நான் பள்ளிக்கூடம் போகிறேன்.

எறும்பு:— சரி! போய்வா.

---



## 18. பிராணிகளிடம் அன்பு

ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா. (1)

சின்னஞ் சிறு குருவிபோல—நீ
திரிந்து பறந்துவா பாப்பா
வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா. (2)

கொத்தித் திரியும் அந்தக் கோழி—அதைக்
கூட்டி விளையாடு பாப்பா
எத்தித் திருடும் அந்தக் காக்காய்—அதற்கு
இரக்கப் படவேணும் பாப்பா. (3)

வண்டி இழுக்கும் நல்ல குதிரை—நெல்லு
வயலில் உழுது வரும் மாடு
அண்டிப் பிழைக்கும் நம்மை ஆடு—இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா. (4)

—பாரதியார்

---

## 19. சோம்பேறிப் பையன்

(கும்மி)

சோம்பித்திரியேல் என்றவ்வையார் சொல்லிய
சொல்லை மறந்த ஓர் சின்னப் பையன்
சோம்பித் திரிந்து பள்ளிக்கூடம் போவதைச்
சுத்தமாய் மறந்து விட்டனனே. 1

நல்ல பிள்ளைகளின் சேர்க்கை இல்லாமலே
நாள்தோறும் சுற்றித் தெருத் தெருவாய்
மெல்ல மெல்லக் கற்ற நல்ல வழக்கத்தை
விட்டு விட்டான் அவன் கெட்டு விட்டான். 2



தந்தையும் தாயாரும் சொல்லிய சொற்களைத்
தட்டி நடக்கவும் ஆரம்பித்தான்
எந்தவிதம் சொல்லிப் பார்த்தாலும் மூளையில்
ஏறுத சோம்பேறி ஆகி விட்டான். 3

பள்ளிக்கூடம் போகும் நேரம் வரையிலும்
பாயிற் படுத்துப் புரண்டொரு நாள்
அள்ளிப்போட்டுக் கொஞ்சம் சாப்பிட்ட தும்விளை
யாடப் புறப்பட்டான் வேடிக்கையாய். 4

நாய் ஒன்றைக் கண்டதைக் கூப்பிடவே அது
நான் வரமாட்டேன் ஐயா என்றது
ஈ யொன்றைக் கண்டவன் கூப்பிடவே அது
எனக்கும் வேலைஉண் டென்றதுவே. 5

சிற்றெறும் பொன்றினைக் கண்டவன் தன்னொடு
சேர்ந்து விளையாடக் கூப்பிட்டனன்
சிற்றெறும்பும் பையா நான் செய்யும் வேலைகள்
தீர்ந்ததும் பேசுவோம் என்றதுவே. 6

பூக்களில் புகுந்த தேனீயைக் கண்டவன்
பொழுதைப் போக்கிடக் கூப்பிடவே
ஊக்கம் இல்லாத ஓர் சோம்பேறி யோடுநான்
ஒன்றுமே பேசிடேன் என்றதுவே. 7

"தேனீயும் எறும்பும் நாயும் ஈயுமே
சேர்ந்தென்னுடன் விளையாடவில்லை
நானே மிகக்கெட்ட சோம்பேறி என்றிவை
நன்றாகப் புத்திகற் பித்தனவே. 8

இன்று முதலாய் நான் தேனீயைப் போலவும்
எறும்பைப் போலவும் உழைத்திடுவேன்
நன்று நன்றென்னவே நல்லவர் வாழ்த்திட
நாளும் உயர்வு பெறுவேனே." 9

என்று துணிந்தவன் வீடு திரும்பினன்
இன்பமுறக் கல்வி கற்க எண்ணி
அன்று முதலே நன்றாய் உழைத்ததால்
ஆனந்த வாழ்க்கை அடைந்தனனே. 10

---



## 20. கோவில்கள்

தினந்தோறும் காலையிலும் மாலையிலும் கடவுளை வணங்கவேண்டும். நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும், கடவுள் நமக்குத் தெரியாமலே கவனித்து வருகிறார். நாம் செய்யும் கெட்ட காரியத்துக்குத் தகுந்தபடி நம்மைத் தண்டிக்கிறார். நல்ல காரியம் செய்தால் அவர் நம்மைக் காப்பாற்றுவார். ஆகையால் தினம் கடவுளை வணங்கி, நல்ல காரியமே செய்து வரவேண்டும்.

கடவுளை வணங்குவதற்குச் சௌகரியமாகக் கோவில்கள் கட்டிவைக்கிறார்கள். கோவிலுக்குப் போனால் நமக்கு ஒருவித உணர்ச்சி ஏற்படுகிறது. அதனாலேயே நாம் பயத்தோடும், மிகப் பக்தியோடும் தெய்வத்தை வணங்குகிறோம்.

ஒவ்வொரு மதத்தினரும், ஒவ்வொரு விதமாகக் கோவில் கட்டிக் கொள்கிருர்கள். இந்துக்கள் கோவிலின் படத்தைப் பார். இதற்குப் பெரிய கோபுர வாசல் உண்டு. இதன் வழியாகச் சென்று உள் வீதியைக் கடந்து, உள்ளே போனல் கடவுள் விக்கிரகம் இருக்கும். ஈசுவரன் கோவிலில் முக்கிய விக்கிரகத்திற்குச் சிவலிங்கம் அல்லது சிவன் என்றும், வைஷ்ணவ ஆலயங்களில் முக்கிய விக்கிரகத்திற்குப் பெருமாள் அல்லது விஷ்ணு என்றும் பெயர். இந்தக் கோவில்களில் சில விசேஷ தினங்களில் திருவிழாக்கள் நடக்கும். திருவிழாக்கள் நடக்கும்போது, அநேக ஜனங்கள் கோவிலுக்கு வருவார்கள்.



இது முஸ்லீம்களின் கோவில். இதை மசூதி என்பார்கள். இதில் கோபுர வாசல் கிடையாது. கூடாரங்கள் போலவும், தூண்கள் போலவும் மேல் கட்டிடங்கள் இருக்கும். கூடாரம் போன்ற நடுக் கட்டிடத்தின் மேல் பிறைச் சந்திரன் அடையாளம் வைப்பார்கள். வெள்ளிக் கிழமை தோறும் மசூதியில் தொழுவதை முஸ்லீம்கள் மிக அவசியமாகக்

கருதுவார்கள். இவர்களுக்கு ரம்ஜான், பக்ரீத் என்ற முக்கியமான பண்டிகைகள் உண்டு.

இந்தக் கோவிலைப் பார். இது ஒரே கோபுரம்போல் உயர்ந்து மேலே சிலுவை நிறுத்தப் பட்டிருக்கிறது. இதுதான் கிறிஸ்தவர்கள் தொழும் கோவில். இதற்கு மாதா கோவில் என்று பெயர். கிறிஸ்தவர்கள் ஞாயிற்றுக் கிழமைதோறும் மாதா கோவிலுக்குப்போவார்கள். இவர்களுக்குக் கிறிஸ்துமஸ், ஈஸ்டர் முதலியவை பண்டிகைகள்.



மேற்கண்ட மூன்றுவிதக் கோவில்கள் தவிர, இன்னும் அநேகவிதக் கோவில்களும் உண்டு. ஆனால் யார் எந்தப் பெயர் கொடுத்து வணங்கினலும் கடவுள் ஒருவர்தான். நாம் எந்தவிதத்தில் தொழுத போதிலும், கடவுள் நம்மைக் காப்பார்.

## கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

---

## 21. காலையில் துயிலெழு

தகப்பனார்:—குழந்தாய் என்ன செய்கிறாய்?



மகன்:—அப்பா! நான் பாடம் படிக்கிறேன்.

தகப்பனார்:—நீ என்ன பாடம் படிக்கிறாய்?

மகன்:—அப்பா! நான் தமிழ்ப் பாடம் படிக்கிறேன்.

தகப்பனார்:— குழந்தாய்! இப்பொழுதுதானா படிக்க ஆரம்பித்தாய்?

மகன்:—ஆம். அப்பா! இப்பொழுது தான் ஆரம்பித்தேன்.

தகப்பனார்:— நீ காலையில் எழுந்து இந் நேரம் வரை என்ன செய்தாய்?

மகன்:—அப்பா! சூரியன் உதிக்கும் முன் எழுந்திருந்தேன். ஆனாலும் தூக்கம் தெளியவில்லை. பிறகு கொஞ்சம் தூங்கினேன்.

தகப்பனார்:— குழந்தாய்! தூங்கி எழுந்த பின் மறுபடியும் படுத்து உறங்கலாமா? அது சோம்பேறித்தனம் அல்லவா?

மகன்:— இனிமேல் அப்படித் தூங்கவில்லை அப்பா.

தகப்பனுர்:—குழந்தாய்! நீ காலையில் எழுந்ததும் பல் விளக்கி, கை கால் சுத்தம் செய்து கொண்டு படிக்க ஆரம்பித்தால் சுறுசுறுப்பு உண்டாகும். தூக்கம் வராது.

மகன் :—அப்படியே செய்கிறேன் அப்பா!

தகப்பனுர் :—குழந்தாய்! நான் சொல்வதைக் கவனித்துக் கேள்.

---

## நீதிபோதனை—பாட்டு

(சின்னச் சின்ன எறும்பே என்ற மெட்டு)

1. என் அருமைக்குழந்தாய்—
இன்று காலை எழுந்தாய்
சொன்ன சொல்லைக் கடவாய்—
சுறுசுறுப்பாய் நடப்பாய்.

2. காலையிலே எழுவாய்—
கடவுளைத் தொழுவாய்
வேலைகளில் முயல்வாய்—
விருப்புடன் பயில்வாய்.

3. அன்னை தந்தை வணங்கு—
அவர் சொல்லுக் கிணங்கு
நன்னயமாய்ப் பழகு—
நல்வழியில் ஒழுகு.

4. பள்ளிக்கூடம் போகப்—
பரபரப் பாக
உள்ள மகிழ்வோடு—
உற்சாகமாய் ஓடு.

5. மெய்யை என்றும் சொல்லு—
மேன்மையாய் நில்லு
பொய்யை என்றும் தள்ளு—
புத்தியைக் கைக்கொள்ளு.

6. துஷ்டப் பிள்ளை நேசம்—
சொன்னேன் மிக மோசம்
கஷ்டம் வரும் பின்னால்—
கண்டு கொள்வாய் முன்னால்.

7. நல்ல பிள்ளை யோடு—
நாடித் தினம் கூடி
மெல்ல மெல்லச் சேராய்—
மேன்மை உண்டு பாராய்.

8. சின்னஞ் சிறு ஜந்துவை—
செய்யாதே நீ தொந்தரை
அன்னம் தண்ணீர் தந்ததை—
ஆதரிப்பாய் மைந்தனே.

---

## 22. வௌவால்

இது ஒரு வௌவால். வௌவால் பறக்கும் பிராணி. இதன் முகம் எலியின் மூகத்தைப்போல் இருக்கும். இதன் தேகத்தில் கருமையான

மயிர்கள் உண்டு. இது மிருகங்களைப்போல் குட்டி போட்டுப் பால் கொடுக்கும். மிருகங்களுக்கு இருப்பதுபோல் இதன் வாயில் பற்கள் இருக்கும். ஆகையால் இது பக்ஷி அல்ல.



வெளவாலுக்கு இரண்டு இறக்கைகள் உண்டு. இவைகள் பறவைகளுக்கு இருப்பது போல் பல இறகுகளாக இல்லை. ஆனால் மெல்லிய தோலால் அமைந்திருக்கும். இந்த இறக்கையின் நடுவில், மெல்லிய குடைக் கம்பிகள் போன்ற எலும்புகள் உண்டு. அவைகளின் உதவியால் வெளவால் தன் இறக்கைகளைக் குடை போல் சுருக்கவும் விரிக்கவும் முடியும்.

வெளவாலின் கால்கள் மெலிந்து குட்டையாய் இருக்கும். கால்களில் நீண்டு வளர்ந்த நகங்கள் உண்டு. இந்த நகங்களின் உதவியால் வெளவால் தலைகீழாகத் தொங்கும். நிற்கவும் நடக்கவும் அதனால் முடியாது. வெளவால் பண்

டங்களின் வாசனையை நன்றாய் அறியும். காதுகள் நீளமாக இருப்பதனால் இது சிறு சத்தத்தையும் கேட்கும்.

வௌவால் பகலில் மரங்களிலும் வீட்டுக் கூரைகளிலும் கோவில்களிலும் இருட்டான இடங்களிலும் தொங்கிக்கொண்டு இருக்கும். இரவில் இரை தேடச் செல்லும்.

வௌவால்களில் வீட்டு வௌவால், பழம் தின்னி வௌவால் என இரண்டு வகை உண்டு. வீட்டு வௌவால் ஈ, கொசு முதலியவைகளைத் தின்னும். ஆடு மாடுகள் தூங்கும்போது, அவைகளின் உடலில் தன் கூர்மையான பற்களை அழுத்தி இரத்தத்தை உறிஞ்சிக் குடிக்கும். பழம் தின்னி வௌவால் மரங்களில் உள்ள பழங்களையே தின்று வாழும். இவை பெரிதாயிருக்கும்.

---

## 23. ஓநாயும் ஆட்டுக்குட்டியும்

தென் தேசத்தில் ஒரு அடர்ந்த காடு இருந்தது. அக் காட்டின் நடுவே ஆறு ஒன்றில் தண்ணீர் ஓடிக்கொண்டு இருந்தது. அப்போது வெயில் காலம். ஆதலால் அக் காட்டிலுள்ள மிருகங்கள் ஆற்றில் தண்ணீர் குடிக்க வருவது வழக்கம்.

ஒரு நாள் இரைதேடி அலைந்த ஓநாய் ஒன்று அங்கு வந்து தண்ணீர் குடித்துக்கொண்டிருந்தது. அச்சமயம் அங்கு ஒரு ஆட்டுக்குட்டி தண்ணீர் குடிக்க வந்தது. அது ஓநாயைக் கண்டு பயந்து, கீழ்ப்பக்கத்தில் சென்று ஒரு ஓரத்தில்



தண்ணீர் குடித்தது. ஓநாய் அதைக் கண்டதும் “ இதோ ! நமக்குச் சரியான ஆகாரம் கிடைத்து விட்டது. இதை எப்படியாவது கொன்று தின்ன வேண்டும் ” எனறு தனக்குள் எண்ணியது.

பிறகு ஓநாய்சிறிதுநேரம் தண்ணீர் குடித்து விட்டு, ஆட்டுக்குட்டியைப் பார்த்து,

(பாட்டு)

நான் குடிக்கும் நல்ல நீரை ஆட்டுக்குட்டியே—நீ என்
நான்கு காலால் கலக்குகிறாய்? ஆட்டுக்குட்டியே!

என்று கேட்டது. அதைக் கேட்ட ஆட்டுக்குட்டி மிகவும் பயந்து நடுங்கி,

(பாட்டு)

ஐயையோ நான் என்ன செய்தேன் ஓநாய் ஐயாவே-இந்த
ஆற்று நீரைக் கலக்கவில்லை ஓநாய் ஐயாவே!
நீர் குடித்த மிச்சமன்றோ ஓநாய் ஐயாவே—நான்
நின்று கீழே குடிக்கின்றேன் ஓநாய் ஐயாவே!

என்று கூறியது. ஆட்டுக்குட்டி சொல்லியது நியாயமாக இருந்தும், ஓநாய் அதை எப்படியும் கொல்ல நினைத்து,

(பாட்டு)

போன வருஷத்தி லேன் ஆட்டுக்குட்டியே—என்னைப்
போக்கிரித் தனமாய் வைதாய் ஆட்டுக்குட்டியே

என்றது. அதைக் கேட்ட ஆட்டுக்குட்டி,

(பாட்டு)

போன வருஷத்தில் நான் ஓநாய் ஐயாவே—இந்தப்
பூமியில் பிறக்கவில்லை ஓநாய் ஐயாவே!
இரண்டே மாதம் நான் பிறந்து ஓநாய் ஐயாவே—உம்மை
எப்படி நான் வைதிருப்பேன் ஓநாய் ஐயாவே!

என்று சொல்லியது. அதற்கு ஓநாய்,

(பாட்டு)

உன் தாயே வைதிருக்கும் ஆட்டுக்குட்டியே—அதற்கு
உன்னைத்தானே கொன்றிடுவேன் ஆட்டுக்குட்டியே!

என்று கூறி, ஆட்டுக் குட்டியை அறைந்து கொன்று தின்றது. துஷ்டர்கள் சிறிதும் பொருத்தமில்லாமல் தம் இஷ்டம் போல் நியாயம் பேசித் தம் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வார்கள். ஆகையால்,

**துஷ்டரைக் கண்டால் தூர விலகு.**

---

## 24. பள்ளிக்கூடம் போதல்

முருகன்:— வேலா! பள்ளிக்கூடம் போகலாம் வருகிறாயா?

வேலன்:— முருகா! அதற்குள் நேரமாய் விட்டதா?

முருகன்:— நேற்று நீ கொஞ்ச நேரம் கழித்து வந்தாயே. உபாத்தியாயர் உன்னைக் கோபிக்கவில்லையா?

வேலன்:— ஆம்! ஆம்! இன்று சரியான நேரத்திற்குப் போய்ச் சேருவோம்.

முருகன்:—வேலா! நேற்று நடந்த பாடங்களை நீ வீட்டில் படித்தாயா?

வேலன்:—முருகா! நான் படிக்கவில்லையே. தூக்கம் வந்தது, தூங்கிவிட்டேன்.

முருகன்:— வேலா! உபாத்தியாயர் பழைய பாடம் கேட்பாரே, அப்பொழுது என்ன செய்வாய்?



வேலன்:—முருகா! நேற்று எனக்குத் தலைவலியாய் இருந்தது; அதனால் படிக்கவில்லை என்று சொல்லுவேன்.

முருகன்:—அப்படிச் சொல்வது பொய்யல்லவா? உபாத்தியாயர் பொய் சொல்லவே கூடாது என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறார்?

வேலன்:— ஆமாம்! பொய் சொல்லக் கூடாது. அது நியாயம்தான். ஆனால் பாடம் படிக்கவில்லை என்று அடிபடலாமா?

முருகன்:—வேலா! நீ உபாத்தியாயரிடம் சென்று, 'ஐயா! நான் படிக்கவில்லை. நேற்று இரவு தூங்கிவிட்டேன்' என்று உண்மையைச் சொல்லுவதுதான் நல்லது.

வேலன்:— அப்படிச் சொன்னால் உபாத்தியாயர் அடிக்கமாட்டாரோ?

முருகன்:— நம் உபாத்தியாயர் யாரையும் நினைத்தபடி அடிக்கமாட்டார். தகுந்த குற்றம் இருந்தால்தானே அடிப்பார். நீ உண்மையைச் சொன்னால் மன்னித்து, இனிமேல் நன்றாய்ப் படித்து வா என்று சொல்வார்.

வேலன்:— முருகா! அப்படியானால் நான் உண்மையைத்தான் சொல்லப் போகிறேன். இதோ பள்ளிக்கூடம் வந்து சேர்ந்துவிட்டோம்.

முருகன்:—வேலா! அதோ பார்! சேவகன் மணி அடிக்க வருகிறான். நாம் சரியான நேரத்திலேயே வந்துவிட்டோம்.

வேலன்:—ஆம்! ஆம்!! அதோ உபாத்தியாயரும் வந்துவிட்டார்.

இருவரும் தங்கள் வகுப்பிற்குச் சென்றார்கள். முருகன் பாடம் நன்றாய் ஒப்பித்தான். வேலன் படிக்காததினால் ஒப்பிக்கவில்லை. ஆனால் உபாத்தி யாயரிடம் உண்மையைக் கூறினான். உபாத்தி யாயரும் அவனை மன்னித்தார். அன்று முதல் வேலனும் நன்கு படித்துக் கெட்டிக்காரனானான். ஆகையால் எப்போதும் உண்மையையே பேச வேண்டும். சரியான நேரத்தில் பள்ளிக்கூடம் போகவேண்டும்.

---

## 25. பூனை

படத்தில் இருக்கும் பூனையைப் பார்! அது என்ன செய்துகொண்டிருக்கிறது? அதன் பக்கத் தில் குட்டிகள் விளையாடுகின்றன. பூனை வீட்டில் வளரும் பிராணி.

பூனையின் தேகத்தில் மிருதுவான மயிர் அடர்ந்து இருக்கும். அது தன் தேகத்தை நாக்கி னால் நக்கிச் சுத்தப்படுத்திக்கொள்ளும். பூனையின் தலை உருண்டையானது. அதன் சிறிய காதுகள் நிமிர்ந்து நிற்கும். முகத்தில் நீண்ட மீசை மயிர் உண்டு. அதன் நாக்கு சொறசொறப்பாய் இருக் கும். பற்கள் மிகவும் கூரானவை. பூனை ஆகா ரத்தை மென்று தின்னாமல் கடித்து விழுங்கும்.

இதன் கருவிழி பகலில் ஒரு கோடுபோலத் தோன்றும். இரவில் வட்டமாய்க் காணப்படும். ஆகையால் பூனைக்குப் பகலில் கண் நன்ருகத்தெரியாது. இரவில்தான் கண் நன்ருய்த் தெரியும்.



பூனையின் பாதங்களில் பஞ்சுபோல் மெதுவான சதைத் திண்டுகள் உண்டு. அதன் விரல்களில் கூரிய நகங்கள் உண்டு. சாதாரணமாய் இருக்கும்போது நகத்தை உள்ளே இழுத்துக் கொண்டிருக்கும். ஆகையால் அது நடக்கும்பொழுது சத்தம் உண்டாகாது. ஆனுல் தனக்கு இஷ்டமானபோது நகத்தை வெளியே நீட்டும். பூனையின் வால் எலியைப் பிடிக்க உதவியாக

இருக்கிறது. வாலை ஆட்டிக்கொண்டே எலியின் மீது பாய்வதால், அதன் குறி தப்புவதில்லை.

பூனை, மாமிசம், பால், தயிர், வெண்ணெய், நெய், சோறு இவைகளைத் தின்னும். எலிகளைத் தின்பதில் அதற்குப் பிரியம் அதிகம். சிறு பறவைகளையும் பிடித்துத் தின்னும். பூனை, இளம் வெயிலிலும், அடுப்பண்டையிலும் படுத்திருக்கும். நாயைக் கண்டால் பயந்து ஓடிவிடும்.

பூனை தன் குட்டிகளைப் பத்திரமாய்ப் பாதுகாக்கும். தன் குட்டிகளை நோகாமல் வாயினால் கௌவிக்கொண்டு போகும். பூனை மாமிச பக்ஷணி. அதற்குச் சரியான ஆகாரம் கிடைக்காவிட்டால், வீட்டிலுள்ள பண்டங்களைத் திருடித் தின்னும். ஆகையால் அது நாயைப்போல் அவ்வளவு நன்றி உள்ள பிராணி அல்ல.

---

## 26. முரசுப் பாட்டு

வெள்ளை நிறத்தொரு பூனை—எங்கள்
வீட்டில் வளருது கண்டீர் ;
பிள்ளைகள் பெற்றதப் பூனை—அவை
பேருக் கொரு நிறமாகும் ;
சாம்பல் நிறம் ஒரு குட்டி—கருஞ்
சாந்து நிறம் ஒரு குட்டி.

பாம்பு நிறம் ஒரு குட்டி—வெள்ளைப்
பாலின் நிறம் ஒரு குட்டி.
எந்த நிறம் இருந்தாலும்—அவை
யாவும் ஒரே தரம் அன்றோ?
இந்த நிறம் சிறிதென்றும்—இஃது
ஏற்றம் என்றும் சொல்ல லாமோ?
ஒன்றென்று கொட்டுமுரசே!—அன்பில்
ஓங்கென்று கொட்டுமுரசே!
நன்றென்று கொட்டுமுரசே!—இந்த
நானில மாந்தருக் கெல்லாம். —பாரதியார்

---

## 27. தபால்காரன்

கண்ணப்பன்;— அப்பா! அதோ போகி றானே, அவன் இந்தக் கடிதத்தை உங்களிடம் கொடுக்கச் சொன்னான். அவன் யார்?

தகப்பன்:— கண்ணப்பா! அவன் தான் தபால்காரன். இது எனக்கு வந்த கடிதம். அதனால்தான் என்னிடம் தரச்சொன்னான்.

கண்ணப்பன்:—அப்பா! இது உங்களுக்கு வந்தது என்று அவன் எப்படிக் கண்டான்?

தகப்பன்:— இதோ பார்! இதில் என் விலாசம் போட்டிருக்கிறது. நீயே படி.

கண்ணப்பன்:— எங்கே பார்ப்போம்; (படிக்கிறான்) ஏன் அப்பா! இது எங்கிருந்து வந்திருக்கிறது?

தகப்பன்:— இந்தக் கடிதம் சென்னப் பட்டணத்திலிருந்து வந்திருக்கிறது. இதை உன் மாமா எழுதியிருக்கிறார்.



கண்ணப்பன்:— சென்னப் பட்டணத்தில் இருந்து என்றைக்கு எழுதியிருப்பார்?

தகப்பன்:— நேற்றுத்தான் எழுதியிருக்கிறார். இதோ பார்! தேதி போட்டிருக்கிறது.

கண்ணப்பன்:— இவன் ஏன் இவ்வளவு பெரிய தோல் பையைத் தோளிலே தொங்க விட்டுக் கொண்டு போகிறுன் அப்பா ?

தகப்பன்:— கண்ணப்பா ! அதிலேதான் அவன் இன்னும் பலருக்குக் கொடுக்கவேண்டிய கடிதங்களை வைத்திருக்கிறுன்.

கண்ணப்பன்:— அப்பா ! இந்த மாதிரி இவன் கடிதம் கொண்டு வந்து கொடுப்பதற்குக் கூலி நாம் கொடுக்க வேண்டாமா ?

தகப்பன்:— நாம் இவனிடம் கூலி கொடுக்க வேண்டியதில்லை. தபால் ஆபீஸில் பணம் கொடுத்து, கார்டு, கவர், தலை, முதலியவைகளை வாங்குகிருேம் அல்லவா? அதிலிருந்து இவனுக்கு மாதச் சம்பளம் கொடுப்பார்கள்.

கண்ணப்பன்:— இந்த ஊர் முழுவதும் இவன் கடிதம் கொடுக்கவேண்டுமே! அப்படியானுல் இவன் வேலை மிகவும் கஷ்டம் !

தகப்பன்:—இந்த ஊருக்கு இவனைப்போல் தபால்காரர்கள் பலர் உண்டு. ஆகையால் இவனுக்குக் கஷ்டம் அதிகம் இல்லை.

கண்ணப்பன்:— இவர்களை எல்லாம் யார் நியமித்தார்கள் ?

தகப்பன்:—இவர்களெல்லாம் நமது இந்திய சர்க்காரின்கீழ், தபால் இலாகாவில் வேலை செய்ப வர்கள். நமது தேச சர்க்கார்ந மக்குச் செய்யும் நன்மைகளில் தபால் இலாகாவும் ஒன்று.

---



## 28. நாய்

இந்தப் படத்தைப் பார். இது ஒரு நாயின் படம். நாய்களில் குச்சுநாய், சடைநாய், பட்டி நாய், வேட்டைநாய் என்று பல வகை உண்டு. படத்தில் இருப்பது ஒரு வேட்டைநாய்.

நாயின் உடல் நீளமானது. தலை சிறியதாய் நீண்டு இருக்கும். காதுகள் சில நாய்களுக்கு நிமிர்ந்தும் சில நாய்களுக்கு மடிந்து தொங்கிக் கொண்டும் இருக்கும். வாயில் கூர்மையான பற்கள் உண்டு. நாயின் நாக்கு நீளமாயிருக்கும். நாய் நாக்கைத் தொங்கவிட்டுக்கொண்டே ஓடும். அதன் நாக்கின் வழியே தண்ணீர் சொட்டுவதைப் பார்த்திருக்கிருயா? அதுதான் வியர்வை நீர். நாயின் முன்கால்களில் ஐந்து விரல்களும் பின்கால்களில் நான்கு விரல்களும் உண்டு. இவைகளின் உதவியால் நாய் விரைவாய்க் குழிதோண்டும். நாயின் வால் எப்போதும் வளைந்தே இருக்கும்.

நாய் மிகவும் நன்றியுள்ள பிராணி. தன்னை வளர்ப்பவர் இடத்தில் பிரியமாய் இருக்கும். இது பகலில் நன்ருய்ப் படுத்துத் தூங்கும். இரவில் விழித்துக்கொண்டே இருக்கும். வீட்டிற்குள் அன்னியர் வராதபடி காவல் காக்கும். திருடனைக் கண்டால் குலைக்கும்.

நாய் எப்பொழுது வாலை ஆட்டுகிறது? எப்பொழுது பல்லைக் காட்டி உறுமுகிறது? கவனித்திருக்கிருயா?.

நாய், பால், சோறு, மாமிசம் முதலானவற்றைத் தின்னும். எலும்பைக் கடிக்க இதற்குப்

பிரியம் அதிகம். பூனையைப்போல் இது வீட்டில் உள்ளவைகளைத் திருடித் தின்னுது. வளர்ப்பவர் பின்னுல் வாலை ஆட்டிக்கொண்டே செல்லும். சொன்னபடி செய்யும்.

நாய் தூரத்தில் உள்ள பொருள்களை வாசனையால் அறிந்துகொள்ளும். வேகமாய் ஓடும். அதனுல் வேட்டையாடுவதற்காக அதை வளர்க்கிருர்கள். சில நாய்கள் தண்ணீரில் நன்ருய் நீந்தும். ஆகையால் தண்ணீரில் விழுந்தவர்களைக் காப்பாற்ற அதைப் பழக்குகிருர்கள்.

நாய் மிகவும் நல்ல பிராணி. அதன் மேல் கல்லை எறியாதே.

---

## 29. உதவி

வேலூரில் சங்கரன் என்ற பெயர் உள்ள ஒரு ஏழைக் குடியானவன் இருந்தான். அவனுக்கு முருகன் என்ற மகன் உண்டு. தகப்பன் மகனை நல்ல வழியில் பழக்கி வந்தான். அவனைப் பலரும் புகழ்வதைக் கண்டு சந்தோஷம் அடைந்தான். தன் மகனுக்கு வேண்டியதை வாங்கிக் கொடுப்பான்.

ஒரு நாள் முருகன் கடைத்தெரு வழியாய் வந்து கொண்டிருந்தான். ஒரு கிழவி கூடை நிறையப் பழங்களைச் சுமந்து கொண்டு வந்தாள். சில துஷ்டப்பிள்ளைகள் அவளைத் தொடர்ந்து சத்தம் செய்துகொண்டு வந்தார்கள். வெயில் வேளையாய் இருந்ததால் மர நிழலில் தன்



கூடையை இறக்கிக் கிழவி கீழே உட்காரப் போனாள். பின்னால் நின்ற ஒரு துஷ்டப் பையன் தன் கையில் இருந்த கற்களைக் கூடையின் மேல் எறிந்தான். கூடையின்மேல் கற்கள் பட்டு சாய்ந்து பழங்கள் கீழே விழுந்து சிதறின.



கூடவந்த சிறுவர்கள் கையில் கிடைத்ததை எடுக்க ஆரம்பித்தார்கள். அதைப் பார்த்த கிழவி அழ ஆரம்பித்தாள். உடனே முருகன் அங்கே ஓடி வந்து, "பாட்டி! அழாதே. நான் பழங் களைப் பொறுக்கித்தருகிறேன்" என்று சொன்னுன்.



கிழவி, "அப்பா! நான் வயதானவள். என்ன செய்வேன்? இந்தப் பழங்கள் முழுவதையும் விற்ருல் எனக்கு இரண்டணுக் கிடைக்கும். இப்படிப் பழங்கள் விழுந்து விட்டதால் இன்றுஎன்பிழைப்பு என்ன ஆகும்? என்ருள். பின் முருகன், விழுந்த பழங்களைப் பொறுக்கி, மண்ணைத் துடைத்துவிட்டுக் கூடையில் போட்டான்.

கிழவி அவன் செய்ததைப் பார்த்துச் சந்தோஷப்பட்டாள். அதன் பிறகு, "அப்பா! நீ நல்ல குழந்தை. நீ சங்கரன் மகனல்லவா! தகப்பனைப் போலவே மகனும் இருக்கிருய். நீ இவ்வளவு நேரம் எனக்காகக் கஷ்டப்பட்டாயே. இந்தா! இதைச் சாப்பிடு" என்று இரண்டு

பழங்களைக் கொடுத்தாள். முருகன் "பாட்டி! எனக்கு ஒன்றும் வேண்டாம். துஷ்டப் பிள்ளைகள் கொஞ்சம் கொண்டுபோய் விட்டார்கள். எனக்கும் கொடுத்தால் உனக்குக் கிடைக்கும் லாபம் கூட இல்லாமல் போய்விடும். வெயிலில்



இதைச் சுமந்து வந்த நீ கஷ்டப் படக் கூடாது" என்றான்.

இந்தச் சமயத்தில் அங்கே வந்த ஒரு பெரியவர் கிழவியிடம் ஒரு ரூபாய் நாணயத்தைக்கொடுத்து, முருகனுக்குப் பழங்கள் வாங்கிக் கொடுத்தார். கிழவி சந்தோஷத்தோடு கொடுத்தாள். கிழவி மிஞ்சிய சில்லரையைக் கொடுக்க வந்தபோது பெரியவர், "அம்மா! இதைத் திருப்பிக் கொடுக்க வேண்டாம். இன்று உனக்கு உண்டான நஷ்டத்துக்காக இருக்கட்டும்" என்றார். கிழவி பெரியவரையும் முருகனையும் வாயாற வாழ்த்தினாள். ஆகையால், பிள்ளைகளே! நீங்களும் முருகன் மாதிரி நடந்துகொள்ள முயற்சி செய்யுங்கள்.

# 30. சுத்தம் சோறு போடும்

தாய்:—மணியா! நீ பள்ளிக்கூடம் போகும் நேரம் ஆகவில்லையா! இன்னும் விளையாடிக் கொண்டிருக்கிருயே!

மகன்:—அம்மா! கொஞ்ச நேரம் பொறுத்துப் போகலாம்.

தாய்:- இந்த உடையைப் போட்டுக் கொண்டா பள்ளிக் கூடம் போகப் போகிருய்?



மகன்:-ஆம் அம்மா! எனக்கு வேறு உடை இல்லையே.

தாய்:-இது ஏன் இவ்வளவு அழுக்காய் இருக்கிறது?

மகன்:—அம்மா! நான் விளையாடும்போது ஒரு பையன் சண்டைக்கு வந்தான். அவனோடு சண்டை செய்ததில் மண்ணில் விழுந்து புரண்டேன். அதனால் அழுக்காய் விட்டது.

தாய்:—இந்த வெயில் நேரத்தில் விளையாடுவது தேகத்திற்குக் கெடுதல் செய்யும். படிக்கும்

பிள்ளைகளுக்கு ஏற்றதும் இல்லை. விளையாடும்போது புழுதியில் புரள்வதும், துஷ்டப் பிள்ளைகளோடு சண்டை செய்வதும் உனக்குத் தக்க காரியங்கள் அல்ல.

மகன்:— விளையாடும்போது புழுதிபடாதா? அம்மா!

தாய்:—கைகால் எல்லாம் புழுதியாய் விட்டதே. உடைகள் மிகவும் அழுக்காக இருக்கிறது. இப்பொழுது அவசரப்பட்டு, சாப்பிட்டுவிட்டுப் போகவேண்டும் என்கிறாய்.

மகன்:— எப்படியாவது பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டுமே அம்மா!

தாய்:—பள்ளிக்கூடத்துக்கு இப்படியே போகலாமா? உபாத்தியாயர் உன் தேகத்தையும் உடையையும் பார்த்து ஒன்றும் சொல்ல மாட்டாரா?

மகன்:—அம்மா! நேற்றுக்கூடக் கோபித்துக் கொண்டார். இனிமேல் இப்படி வராதே என்றார்.

தாய்:— பார்த்தாயா! உன் உபாத்தியாயர் கோபித்துக்கொண்டும் நீ மறுபடியும் புழுதியில் போய் விளையாடினையே. கை கால்களில் உள்ள புழுதியைத் தேய்த்துக் கழுவாமல் நீ சாப்பிடக் கூடாது. அப்படிச் சாப்பிட்டால் அடிக்கடி வியாதி வரும். இந்த மாதிரி உடையைக் கட்டிக்

கொள்வது வியாதிக்குக் காரணமாகும். இதனால் தான் எவ்வளவு ஜாக்கிரதையாய் இருந்தும், உனக்கு அடிக்கடி தலைவலி, காய்ச்சல் முதலிய வியாதிகள் வருகின்றன. வாரத்தில் மூன்று நாள் வியாதியால் படுத்துக்கொள்கிறாய்!

மகன்:— அப்படியானால் எனக்கு இன்று சாப்பாடு இல்லையா அம்மா?

தாய்:— சுத்தமாய் இருந்தால்தான் சாப்பாடு கிடைக்கும். ஆகையால் நீ இப்பொழுதே வேகமாய்ப்போய், குளிர்ந்த ஜலத்தில் நன்றாய்த் தேய்த்துக் குளித்துவிட்டு வா. வேறு சுத்தமான உடை தருகிறேன். உடுத்திக்கொண்டு சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்கூடம் போகலாம். இனிமேல் நீ எல்லா நேரத்திலும் விளையாடக்கூடாது. பள்ளிக்கூடத்துக்குப்போக இன்னும் நேரம் இருக்கிறது. அவசரம் இல்லை.

மகன்:— அம்மா! இனிமேல் ஜாக்கிரதையாக இருக்கிறேன். உபாத்தியாயர் கோபித்ததையும் தாங்கள் சொன்னதையும் மறக்கவே மாட்டேன்.

மணியன் தன் தாய் சொன்னபடியே நடந்து நன்மை அடைந்தான். ஆகையால் பிள்ளைகளே! நீங்களும் சுத்தமாய் இருங்கள்.

---

# 31. நாணயங்கள்

மாணிக்கம் : - அம்மா! நான் கடைக்குப் போய் மிட்டாய் வாங்கவேண்டும். எனக்கு ஒரு அணுக் கொடுங்கள்.

தாயார் :—குழந்தாய்! உனக்கு ஒரு அணுவா வேண்டும்? எவ்வளவுக்கு மிட்டாய் வாங்கப் போகிருய்?

மாணிக்கம் :—அம்மா! நான் அரை அணுவுக்கு வாங்குவேன். மீதம் உள்ள அரை அணுவுக்கு ஒரு பம்பரம் வாங்கப்போகிறேன்.










தாயார் :—குழந்தாய்! என்னிடத்தில் சில்லரை இல்லையே. ஒரு ரூபாயாகத்தான் இருக்கிறது. அதை மாற்றிச் செலவு செய்ய உனக்குத் தெரியுமா?

மாணிக்கம் :—அம்மா! எனக்குத் தெரியும். அப்பாகூட ஒருநாள் கடைக்குப் போயிருந்தேன். மாற்றும் வழியெல்லாம் எனக்கு அவர் சொல்லிக் கொடுத்தார்.

தாயார் :—இப்பொழுது எல்லாம் ஞாபகம் இருக்கிறதா?

மாணிக்கம் :—அம்மா! ஞாபகம் இருக்கிறது. ஒரு ரூபாயில் பாதி அரை ரூபாய். ஆகையால் ஒரு ரூபாய்க்கு இரண்டு அரை ரூபாய் சரி. அரை ரூபாயில் பாதி கால் ரூபாய். கால் ரூபாயில் பாதி அரைக்கால் ரூபாய். அரைக்கால் ரூபாயில் பாதி ஒரு அணு. ஒருஅணுவில் பாதி அரை அணு. அரையணுவில் பாதி காலணு காலணுவுக்கு மூன்று தம்பிடி.

தாயார் :—குழந்தாய்! ஒரு ரூபாய்க்கு எத்தனை அணு தெரியுமா?

மாணிக்கம் :—அம்மா! ஒரு ரூபாய்க்குப் பதினறு அணு.

தாயார் :—குழந்தாய்! நாணயங்கள் ஒவ்வொன்றும் என்ன உலோகத்தால் செய்யப்பட்டவை தெரியுமா?

மாணிக்கம் :—அம்மா! தெரியும். ஒரு ரூபாய், அரை ரூபாய், கால் ரூபாய் இவைகளெல்லாம் வெள்ளி நாணயங்கள். அரைக்கால் ரூபாய், ஒரு அணு, அரையணு முதலிய நாணயங்கள் நிக்கல் என்ற உலோகத்தால் செய்யப்பட்டவை. கால் அணு, பைசா இவைகளெல்லாம் செம்பு நாணயங்கள்.

தாயார் :—சரி! இந்த ரூபாயை எடுத்துக் கொண்டுபோய்ச் சில்லரை மாற்றி, எல்லா நாணயமும் இருக்கும்படி வாங்கிவா.

மாணிக்கம் :—அம்மா! அரை ரூபாய் ஒன்று, கால் ரூபாய் ஒன்று, அரைக்கால் ரூபாய் ஒன்று, ஒரு அணு ஒன்று, அரை அணு ஒன்று, கால் அணு ஒன்று, பைசா மூன்றும் வாங்கி வருகிறேன்.

தாயார் :—பிறகு உனக்கு ஒரு அணுத் தருகிறேன். இந்தக் கணக்கை எல்லாம் நீ சரியாய்ச் சொன்னதால், உனக்கு ஒரு அணு அதிகமாய்த் தருகிறேன்.

மாணிக்கம் :—அம்மா! மிகவும் சந்தோஷம்; கடைக்குப் போய் வருகிறேன்.

தாயார் :—சரி! அப்படியே சீக்கிரம் வா.

---

## 32. பிட்டுக்குமண் சுமந்தவர்

மதுரை நகரத்தில் ஒரு கிழவி இருந்தாள். அவள் பிட்டு விற்று, அதனுல் வரும் லாபத்தால் பிழைப்பவள். அவள் பெயர் வந்தி. வாணியர் ஜாதியில் பிறந்தவள்; மிகுந்த பக்தி உள்ளவள். ஒவ்வொரு நாளும் வியாபாரம் செய்யுமுன், சிவபெருமானுக்குப் படைக்கும் வழக்கம் உடையவள். மதுரைக்கு வடக்கே வைகை நதி போகிறது. ஒரு நாள் வைகைநதியில் வெள்ளம் வந்தது. வெள்ளம் ஊரை அழித்துவிடும்போல் இருந்தது.

அக்காலத்தில் மதுரையை அரிமர்த்தன பாண்டியன் ஆண்டுவந்தான். ஆற்றில் வெள்ளம் வருவதை அறிந்தான். மதுரையைக் காப்பாற்ற எண்ணினான். வீட்டுக்கு ஒரு ஆள் வந்து வெள்ளத்தைத் தடுக்க அணை போடவேண்டும் என்று உத்தரவு செய்தான். வந்தி தன் பங்குக்குக் கூலி ஆள் தேடினாள். எல்லா வேலைக்காரர்களும் அதிகக் கூலி கிடைக்கும் இடங்களுக்குப் போனார்கள். வந்தியோ ஏழை. சொந்தக்காரர் ஒருவரும் இல்லாததால் தெய்வமே கதி என்று கோவிலுக்குப் போய் முறையிட்டுக் கொண்டாள்.

அப்போது தெருவில் ஒரு கூலி ஆள், "எனக்கு யாரும் வேலை தருவார் இல்லையா?" என்று கேட்டுக்கொண்டு வந்தான். அவன் அழகான வாலிபனாய் இருந்தான். வந்தி தன் வேலையைச் செய்ய அவனை அமர்த்தினாள். அவனும் வேலைசெய்ய ஒப்புக்கொண்டு, "பாட்டி! எனக்கு என்ன கூலி தருவாய்?" என்று கேட்டான். அதற்கு வந்தி, "அப்பா! விற்பனைக்குச் செய்யும் பிட்டில் உதிர்ந்ததை எல்லாம் உனக்குத் தருகிறேன்" என்றாள். கூலியாள் ஒப்புக்கொண்டு வேலைக்குப் போனான். ஆற்றின் கரை ஓரத்தில் வந்தி பிட்டு வேக வைத்துக் கொண்டிருந்தாள்.

கூலியாள் சிறிது நேரம் வேலை செய்து, களைத்தவன்போல் வந்து, "பாட்டி! எனக்குக் கொஞ்சம் பிட்டுக் கொடு" என்றான். அவள்

கொஞ்சம் கொடுத்தாள். செய்த பிட்டெல்லாம் உதிர்ந்து போகக்கண்டு அவன் கேட்கும்போ தெல்லாம் கொடுத்து வந்தாள். கூலி ஆள் வயிறு நிறையப் பிட்டுத்தின்று, கொஞ்சம் தண்ணீரையும் குடித்துவிட்டு, ஒரு இடத்தில் தூங்கினுன்.



இதைக் கண்ட அரசனுடைய வேலைக்காரர் கள் அரசனிடம் தெரிவித்தனர். அரசன் மிகவும் கோபங்கொண்டு கூலியாள் இருக்கும் இடத்தில் வந்து, தன் கைப்பிரம்பால் அவன் முதுகில் அடித்தான். அந்த அடி எல்லோருடைய முதுகி லும் பட்டது. உடனே கூலி ஆள் எழுந்திருந்து ஒரு கூடை மண்ணை உடைப்பில் கொட்டிவிட்டு மறைந்தான். அணையும் முடிவுபெற்றது! இதைக்

கண்ட எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். சிவ பெருமானே வந்தியின் பக்திக்காகக் கூலி ஆளாய் வந்தார் என்று அறிந்தார்கள். எல்லோருக்கும் சிவபெருமான் காட்சி கொடுத்து அருள்புரிந்தார்.

---

## 33. கிராமம்

அருணகிரி :—மாமா ! இன்று காலையில் கிரா மத்துக்குப் போய்வருவோம் என்றீர்களே. இப் போது போகலாமா ?

மாமன் :—அப்பா! உன் தகப்பனாரை உத்தரவு கேட்டாயா? அவர் போகச்சொன்னால் நீ வரலாம்.

அருணகிரி :—மாமா ! நான் கேட்டேன். போய்வா என்றார்.

மாமன் :—அப்படியானால் சரி! போக லாம் வா. உன்னால் அதிக தூரம் நடக்கமுடியாது. வண்டியிலே போவோம். கிராமத்துக்குச் சமீபத் திலே போய் இறங்கி நடந்து போவோம்.

அருணகிரி :—அப்படியே மாமா. இரண்டு பக்கங்களிலும் பார்த்துக்கொண்டே மெல்லப் போகவேண்டும்.

மாமன் :—இதோ கிராமத்துக்கு அருகிலே வந்துவிட்டோம். தோட்டங்களும் வயல்களும் வழியெல்லாம் இருப்பதைப் பார்.

அருணகிரி :—மாமா! வயல் நடுவிலே ஒருவர் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு போகிருர். அதோ இன்னெருவன் தடியைக் கையில் வைத்துக்கொண்டு அவருக்கு உதவி செய்கிருன். இவர்கள் யார்? இவர்கள் என்ன செய்கிருர்கள் ?

மாமன் :—அருணகிரி! சங்கிலி வைத்துக்கொண்டு அளப்பவர்தான் இந்தக் கிராமத்துக் கணக்குப்பிள்ளை. அவரை, கர்ணம் என்றும் சொல்வதுண்டு. அவர் கூட இருப்பவர்தான் தண்டல்காரன். இவர்கள் இங்கே நிலங்களை அளக்கிருர்கள்.

அருணகிரி :—மாமா! இவர்களுக்கு வேறு வேலை உண்டா? இவ்வளவுதான ?

மாமன் :—கணக்குப்பிள்ளை நாம் பயிர் செய்யும் நிலங்களை அளந்து பார்ப்பார். நம் நிலத்தில் என்ன தானியம் பயிர் செய்கிறோம் என்று எழுதி வைப்பார். நாம் கொடுக்கவேண்டிய வரிகள் இவ்வளவு என்று எழுதி, கிராம மணியக்காரரிடம் கொடுப்பார். பின்னும் மணியக்காரருக்கு வேண்டிய உதவிகளைச் செய்வார். தண்டல்காரன் கணக்குப் பிள்ளைக்கு உதவியாக அவர் சொன்ன வேலைகளைச் செய்வான்.

அருணகிரி :—மாமா! மணியக்காரர் என்று சொன்னீர்களே; அவருக்குக் கிராமத்தில் என்ன வேலை ?

மாமன் :—அருணகிரி! நாம் கிராமத்துக்குள் போகும்போது அவரைப் பார்ப்போம். அப்போது அவரைப் பற்றிப் பேசுவோம்.

அருணகிரி :—மாமா! இதோ கிராமத்துக்குப் பக்கத்தில் ஒரு பெரிய கிணறு இருக்கிறதே. நம் ஊரில் இவ்வளவு பெரிய கிணறு கிடையாதே. இதில் ஜனங்கள் ஜலம் எடுக்கிறார்கள்.



மாமன் :—இதுதான் கிராமக்கிணறு. இதை ஊர்க்கிணறு என்றும் சொல்லுவார்கள்.

அருணகிரி :—அதோ ஒரு சிறு வீடு தனியாய் இருக்கிறதே! திண்ணையிலும், வெளியிலும் ஜனங்கள் கூட்டமாக இருக்கிறார்கள். ஒருவர் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். திண்ணைப்பக்கத்தில் இரண்டு பேர் நிற்கிறார்கள்.

மாமன்:—அருணகிரி! இதுதான் கிராமச் சாவடி. உட்கார்ந்து இருப்பவர்தான் இவ்வூர் கிராம அதிகாரி. இவரை கிராம முன்சீப், மணியக்காரர் என்றும் சொல்லுவார்கள். இவர் இப்போது கிராம ஜனங்களுக்குள் ஏற்பட்ட ஒரு வழக்கை விசாரிக்கிருர். வெளியே தடியோடு நிற்பவன் தலையாரி. தமுக்கோடு நிற்பவன் தோட்டி.

அருணகிரி:—இ வ ர் க ளு க் கு இன்னும் என்ன வேலை உண்டு?

மாமன்:—கிராமாதிகாரி கிராமத்தில் பிறக்கும் குழந்தைகளின் கணக்கு எழுதுவார். இறந்தவர்கள் பெயரைப் பதிவு செய்வார். சர்க்கார் தீர்வையை வசூல் செய்வார். இன்னும் சில முக்கியமான வேலைகளும் இவருக்கு உண்டு.

அருணகிரி:—தலையாரி, தோட்டி என்கிறீர்களே அவர்களுக்கு என்ன வேலை?

மாமன்:— மணியக்காரர் சொல்லும் வேலையைத் தலையாரி செய்வான். இரவில் ஊரைக்காவல் செய்வான். தோட்டி முக்கியமான சமாச்சாரங்களைத் தமுக்கு அடித்து ஜனங்களுக்குத் தெரிவிப்பான்.

அருணகிரி:—மாமா! கிராம ஏற்பாட்டைத் தெரிந்து கொண்டேன். ஊருக்குப் போகலாமா?

மாமன்:—ஆம்! அப்படியே செய்வோம்.

---

# 34. படப் பழக்கம்—II

[ தைரியமுள்ள ராமன் ]




ராமனும் அவன் தங்கையும் தெருவில் நின்றுகொண்டிருந்தார்கள். அப்போது ஒரு நாய் அவர்களைக் கடிக்க ஓடிவந்தது. ராமன் தன் தங்கையை எப்படிக் காப்பாற்றினான்?

---

# உலக நீதி

---

ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்லவேண்டாம்.
மாதாவை ஒருநாளும் மறக்கவேண்டாம்.
வஞ்சனைகள் செய்வாரோ(டு) இணங்கவேண்டாம்.
போகாத இடந்தனிலே போகவேண்டாம்.
அடுத்தவரை ஒருநாளும் கெடுக்கவேண்டாம்.
தனம்தேடி உண்ணாமல் புதைக்கவேண்டாம்.
தருமத்தை ஒருநாளும் மறக்கவேண்டாம்.
கொலைகளவு செய்வாரோ(டு) இணங்கவேண்டாம்.
கற்றவரை ஒருநாளும் பழிக்கவேண்டாம்.
வார்த்தைசொல்வார் வாய்பார்த்துத் திரியவேண்டாம்.
மதியாதார் தலைவாசல் மிதிக்கவேண்டாம்.
மூத்தோர் சொல் வார்த்தைகளை மறக்கவேண்டாம்.
முன்கோபக்காரரோ(டு) இணங்கவேண்டாம்.
சேராத இடந்தனிலே சேரவேண்டாம்.
செய்நன்றி ஒருநாளும் மறக்கவேண்டாம்.
பிணை இட்டுத் துணைபோய் நீ நிற்கவேண்டாம்.
காணாத வார்த்தைகளைக் கட்டுரைக்கவேண்டாம்.
புண்படவே வார்த்தைகளைச் சொல்லவேண்டாம்.
வாதாடி வழக்குரைத்துச் சொல்லவேண்டாம்.
திறம்பேசிக் கலகமிட்டுத் திரியவேண்டாம்.
இறந்தாலும் பொய்தன்னைச் சொல்லவேண்டாம்.
தெய்வத்தை ஒருநாளும் மறக்கவேண்டாம்.

---

# ஆத்திசூடி

ஆத்திசூடி அமர்ந்த தேவனை
ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே.

1. அறம் செய விரும்பு
2. ஆறுவது சினம்
3. இயல்வது கரவேல்
4. ஈவது விலக்கேல்
5. உடையது விளம்பேல்
6. ஊக்கமது கைவிடேல்
7. எண்எழுத்து இகழேல்
8. ஏற்ப(து) இகழ்ச்சி
9. ஐயம் இட்டு உண்
10. ஒப்புர ஒழுகு
11. ஓதுவ(து) ஒழியேல்
12. ஔவியம் பேசேல்
13. அஃகம் சுருக்கேல்
14. கண்(டு) ஒன்று சொல்லேல்
15. சனி நீராடு
16. ஞயம்பட உரை
17. இணக்கம் அறிந்(து) இணங்கு
18. தந்தை தாய்ப்பேண்
19. நன்றி மறவேல்
20. வஞ்சகம் பேசேல்
21. உத்தமனா யிரு.

